# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

## சொல்வளமே மொழி வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 1 விளைச்சல் : 9 திருவள்ளுவர் ஆண்டு 2052 பிப்பிரவரித் திங்கள் - 2021





- தொழில்சார் கலைச்சொற்கள்!
- தேவநேயப் பாவாணர் விருது!
- வீரமாமுனிவர் விருது!
- செங்காந்தள் – சில உண்மைகள்!
- சொல்லாக்க உத்திகள்!
- இல்லந்தோறும் இனிமைத் தமிழில் பேசுவோம்!
- 1,2,3.... தமிழ் எண்களே!
- தயிர் உண்போம்!

# தொழில்சார் கலைச்சொற்கள்

1. Printing regulator - அச்சு சீரியக்கி
2. Export market - ஏற்றுமதி அங்காடி
3. Mercantile rule - வணிக நெறி
4. Mercantilist - வணிகவியலர்
5. Merchant mark - வணிகக்குறிகள்
6. Occupational dialect - தொழில்சார் கிளை மொழி
7. Occupational hazards - தொழில் இடர்ப்பாடுகள்
8. Printing machine - அச்சுப்பொறி
9. Printing press - அச்சகம்
10. Printing technology - அச்சுக்கலை நுட்பவியல்
11. Commercial photography - வணிக ஒளிப்படவியல்
12. Commercial vehicles - வணிக ஊர்திகள்
13. Business goals - வணிக இலக்குகள்
14. Business magnate - தொழில்வல்லார்
15. Business acumen - வணிக நுண்திறன்
16. Business barometer - வணிகக்கணிப்பு
17. Cost curve - செலவு வளைவு
18. Cost of foodgrains - அகவிலை
19. Business jargon - வணிகத் தொடர்கள்
20. Business interest - வணிக ஆர்வம்
21. Cost of maintenance - பேணுகைச்செலவு
22. Shop committee - அங்காடிக்குழு
23. Tariff - காப்புவரி/உல்குவரி
24. Share transfer - பங்குமாற்றம்
25. Commission merchant - தரகுவணிகர்

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2052 - சார்வரி - தை
பிப்பிரவரி 2021

ஆசிரியர் : தங்க. காமராசு
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



## ஆசிரியர் பேசுகிறார்

# அகராதிகள் ஏன் தேவை ?

அன்பானவர்களே வணக்கம். தமிழ் வளர்ச்சிக்கு அகராதிகள் பயன்படுமா ? என்று பலருக்கும் ஐயம். சிலர் என்னிடம் இந்த ஐயத்தைக் கேட்டிருக்கிறார்கள். சிலருக்கு ஐயவினா; சிலருக்கு அறிவினா.எதுவாகினும் அவர்களுக்குத் தெளிவுபடுத்துவது நல்லது.

தமிழ் வளர்ச்சிக்கு அரசு நிலையில் பல்வேறு அமைப்புகளும், பல்கலைக்கழகங்களும், கல்வி நிலையங்களும், தமிழர்கள் நிலையில் தமிழமைப்புகளும், அறக்கட்டளைகளும் பல்வேறு பெயர்களில் ஏராளமாக இருந்த காலத்தில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் என்று ஒரு தனி இயக்ககத்தை அரசு தோற்றுவித்ததற்கான காரணத்தை ஆய்வு செய்ய வேண்டும்.

தமிழ்மொழியைச் சிதைவிலிருந்தும் அழிவிலிருந்தும் பாதுகாப்பது அகராதிகளே என்பதால் அந்த அகராதிகளை உருவாக்கும் பணியை மேற்கொள்ள அகரமுதலித் திட்ட இயக்ககம் 1974இல் கட்டமைக்கப்பட்டது. அதன் முதல் இயக்குநராக ‘மொழிஞாயிறு’ தேவநேயப் பாவாணர் அவர்கள் பொறுப்பேற்றுக் கொண்டு, தமிழில் உள்ள சொற்களையெல்லாம் ஒருங்கு தொகுத்து அச்சொற்களின் வேர்ச்சொற்கள், அச்சொற்கள் பயன்படுத்தப்பட்ட இலக்கியங்கள், சொற்களின் வரலாறு ஆகியவற்றையும் பல நூல்களின்வழி பதிவு செய்து, சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் 31 தொகுதிகள் வெளிவரக் காரணமாகத் திகழ்ந்தார். இந்தப் பேரகராதியின் நீட்சி தான் இன்று பல்வேறு தலைப்புகளில் காலத்திற்கு ஏற்றவாறு அகராதிகள் வடிவமைத்து வெளியிடப்படுகின்றன. இலக்கிய அறிஞர்களை விட அகராதியியல் அறிஞர்கள் மிகவும் குறைவு என்றாலும் அவர்கள் இத்தொகுப்புகளை அடித்தளமாகக் கொண்டு பலதுறை கலைச்சொற்களைத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறார்கள். இதனால் தமிழ்மொழிச் சொற்கள் பல தலைமுறைக்கும் தம்மை நிலை நிறுத்திக் கொண்டுள்ளன.

ஒரு மொழி ஆசிரியருக்கான அத்தனை பணியினையும் அகராதிகள் செய்கின்றன. அதனால் மொழி ஆசிரியர் தேவைப்படும் வரை அகராதிகள் தேவைப்படும். அகராதிகள் தேவைப்படும் வரை அகரமுதலித் திட்ட இயக்ககம் தேவை என்பதை அரசு உணர்ந்துதான் இவ்வியக்ககத்திற்குப் பல்வேறு திட்டங்களை வழங்கி வருகிறது. ஒரு மொழி சிறந்த மொழி, செம்மொழி என்றெல்லாம் பெருமைப்பட்டுக் கொள்வதற்கு அந்த மொழியில் உள்ள சொற்களின் எண்ணிக்கையையே அளவுகோலாகக் கொள்ள வேண்டும். சொல்வளமே மொழி வளமாகும். சொல் வளத்தைப் பெருக்குவதற்குத் துறைகள் தோறும் புதிய புதிய அகராதிகளை அகரமுதலித் திட்ட இயக்ககம் வெளியிட்டு வருகின்றது. வேர்ச்சொல் ஆராய்ச்சி ஒரு பக்கம் நடைபெற்றாலும் கலைச்சொல்லாக்கம் தான் இந்தக்காலத் தலைமுறையினருக்கு மிகவும் தேவைப்படுகிறது. கலைச்சொல் உருவாக்கப் பணிகளையும் சொற்குவை என்ற பெயரில் தொழில் நுட்ப உதவியுடன் அகரமுதலித்திட்ட இயக்ககம் செயற்படுத்தி வருகின்றது. இந்தச் சொற்குவைக்கென்று தனி வலைத்தளம் தோற்றுவிக்கப்பட்டு, அதில் 3 இலட்சத்து 85 ஆயிரத்து 788 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. உலக நாடுகள் முழுவதிலிருந்தும் ஏறக்குறைய 20 ஆயிரத்திற்கும் மேற்பட்டோர் இந்தச் சொற்குவை வலைத்தளத்திற்குள் வந்து போகிறார்கள். குறிப்பாக இந்த வலைத்தளத்தை அச்சு மற்றும் காட்சி ஊடகங்களும், ஆராய்ச்சி மாணவர்களும், தமிழ்ப் பற்றாளர்களும் அன்றாடம் பயன்படுத்துகிறார்கள்.

அகராதியின் வரலாறு தொல்காப்பியத்தில் தொடக்கப் புள்ளியாக இருந்து நிகண்டுகளாக உருவாகி அகராதி என்று படிப்படியாக வளர்ந்து இன்று சொற்குவை என்று மாற்றம் பெற்றுள்ளது. ஏட்டளவில் இருந்த அகராதிகளை இணைய அளவில் வளர்ச்சி அடையச் செய்த பெருமை அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்கு உண்டு. அகராதிகள் ஏட்டளவிலும் இணையளவிலும் நின்றுவிடக் கூடாது. அகராதிகளில் உள்ள சொற்களை மக்கள் பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் இயல்பாகவே பயன்படுத்தும் புழக்கநிலையை உருவாக்க வேண்டும். அந்த நிலையை உருவாக்கும் பணியைத் தான் அகரமுதலித் திட்ட இயக்ககம் செய்துவருகின்றது. சொற்குவைத் திட்டத்தின் வழியாக அதில் வெற்றியும் கண்டு வருகிறது. அதனை அடுத்த கட்ட வளர்ச்சிக்கு முன்னேற்றும் முயற்சியிலும் இவ்வியக்ககம் முழுமூச்சாகச் செயல்பட்டு வருகிறது. அகரமுதலித் திட்டத்தில் இணைந்து வருகின்ற ஆயிரக்கணக்கான இளைஞர்களின் தனியாற்றலைக் கொண்டே இனி தமிழ் மொழி பாதுகாக்கப்பட வேண்டும் என்பதில் அரசு உறுதியாக இருக்கின்றது. ‘சொல் வயலில்’ திங்கள் தோறும் வெளிவரும் செய்திகளே அதை மெய்ப்பிக்கும்.

தமிழ் மொழியும் தமிழ் அகராதிகளும் உடலும் உயிரும் போன்றவை. சொற்கள் என்ற மூச்சு இருக்கும் வரை மொழி என்ற உடல் இயங்கும். இவை இரண்டையும் இணைத்துப் பாதுகாக்கும் பொறுப்பை அகரமுதலித் திட்ட இயக்ககம் ஏற்றுக்கொண்டுள்ளது. தாய்மொழி மீது பற்றுக் கொண்ட அத்தனை நல்ல உள்ளங்களும் அகரமுதலித் திட்ட இயக்ககத்தோடு தங்களை இணைத்துக் கொண்டால் அகராதிகள் ஏன் என்ற கேள்விக்குத் தெளிவான விடை கிடைக்கும். உங்களை அன்புடன் வரவேற்கிறேன். நேரில் பேசுவோம்.

மீண்டும் சந்திப்போம்...

●

# அறிய வேண்டிய அரிய செய்தி - 9

## வடமொழியில் தமிழ்ச் சொற்கள்

நம் தமிழின்கண் பிறமொழிச் சொற்கள் வந்து கலந்தமை போலவே, வடமொழியிலும் தமிழ்ச்சொற்கள் கலந்துள்ளன என்று அறிஞர்கள் கூறுவர். கால்டுவெல், குண்டர்ட் முதலானோர் திராவிட மொழிகளிலிருந்து வடமொழி பல்வேறு சொற்களைக் கடன்வாங்கியுள்ளது என்பதனைத் தெளிவாகக் கூறியுள்ளனர். Rhys Davids என்னும் அறிஞர், வடமொழி, எபிரேயம், கிரேக்கம் ஆகிய மூன்று மொழிகளிலும் தமிழ்ச்சொற்கள் உள்ளன என்பர். "The three classical languages of the world viz, Sanskrit, Hebrew and Greek, Contain Tamil words in the Vocabulary" இனி வடமொழியில் காணப்படும் தமிழ்ச்சொற்களைக் காணலாம்.

தமிழ், மலையாளம் இவற்றில் 'அகில்' என்ற சொல் காணப்படும். மரத்தை உணர்த்தும் இச்சொல் "குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்" என்று பட்டினப்பாலையில் குறிப்பிடப்படுகிறது. துளு மொழியில் "அகிலு" என்ற வடிவம் உண்டு. இச்சொல் சமஸ்கிருத மொழியிலும், பிராகிருத மொழியிலும் காணப்படுகிறது.

'கடக' என்ற சொல்லும் தமிழின் 'கட்டு' என்ற சொல்லடியாகப் பிறந்து 'வளையல்' என்ற பொருளில் வடமொழியில் உள்ளது என்பர் அ. சிதம்பர நாதன். வடமொழியினர் 'கடகர்' என்பதற்கு அதன் அடிச்சொல்லைக் காட்ட இயலாது இடர்ப்படுவர். 'கடினம்' என்பது வடசொல் என்பர். இது 'கட்டி' என்ற தமிழ்ச்சொல்லடியாகப் பிறந்திருக்க வேண்டும். தெலுங்கில் 'கடிதி', கன்னடத்தில் 'கடுகு', துளுவில் 'கட்டி' என்னும் வடிவங்களின் இருத்தலைக் காணமுடிகிறது.

'கமலம்' என்ற சமஸ்கிருதச் சொல் குவளையின் திரிபு எனலாம். தமிழில் 'குவளை', கன்னடத்தில் 'Ftbs', 'கோவல்', தெலுங்கில் 'கலவா' என்னும் வடிவங்களைக் காணமுடிகிறது. இவற்றின் அடியாகத்தான் கமலம் என்பது தாமரையைக் குறிக்கத் தோன்றிருத்தல் வேண்டும் என்பர்.

இவ்வாறே தமிழில் 'கலங்கல்' வடமொழியில் "கலஹ" என்று காணப்படுகிறது. 'கல்' என்னும் வினையடியாகப் பிறந்த 'கலை' என்பது தூயதமிழ்ச்சொல். இதுவே வடமொழியில் 'கலா' என்று திரிந்துள்ளது.

கூந்தலை உணர்த்தும் 'குழல்' என்னும் சொல் திராவிட மொழிகளில்காணப்படுகின்றது.மலையாளத்தில் குழல், தெலுங்கில் 'குருளு', கன்னடத்தில் 'குருள்' இனி வடசொல்லாகிய 'குரல்' என்னும் சொல் இங்கிருந்து சென்றுள்ளதாகவே அறியமுடிகிறது.

'கூவல்' என்பது கிணற்றையுணர்த்தும் தமிழ்ச் சொல். 'குடம்புகாக் கூவல்' என்பது சிலப்பதிகாரத்தில் காணப்படுகிறது. இது வடமொழி ரிக் வேதத்தில் 'கூப' என்று காணப்படுதலை நோக்கி 'கூபம்' என்பதே 'கூவல்' என்று கூறுவதை அறியமுடிகிறது.

'டி.பர்ரோ' என்னும் மொழி அறிஞர் தம்முடைய "The Sanskrit Language" என்னும் நூலில் ரிக் வேதத்தில் காணப்படும் தமிழ்ச்சொற்களைக் குறிப்பிடுகின்றார். தமிழில் உள்ள உலக்கை, வலம், மயில், மாலை, முரசு, வள்ளி, உடுக்கை முதலான சொற்கள் வடமொழியில் முறையே Ulukhala, bala, mayura mala, muraja, valli, hudukks எனப் புகுந்துள்ளமையைக் காட்டுவர்.

சொற்களின் பிறப்பு வரலாற்றை இலக்கண நெறிப்படி நின்று ஆராய்ந்து அவை எம்மொழியைச் சார்ந்தவை என்று கூறலாம் "எவ்வகையிலேனும் ஒரு சில சொற்கள் பிறமொழியினின்றும் வந்து கலத்தல் இயல்பு' என்பர் மொழிநூலார் ஜெ. வெண்ட்ரியஸ் என்பவர் "Contact between language is an historical necessity" என்று கூறுவார்.

ஆயினும் பிறமொழிச் சொற்களை வரையறையின்றி எக்காலத்திலும் எந்நூலிலும் புகுத்துவது தவறாகும். பிறமொழிச்சொற்கள் புகாவண்ணம் காத்தல் மிகவும் அரிதாகும். அவ்வாறு மொழிக்கலப்பு ஏற்படும் பொழுது, இருமொழிகளில் செல்வாக்கு உடைய மொழி வாழ, பிறிதொன்று அழியும்.

இம்மொழிக் கலப்பில் பொருள்களின் பெயர்களும், பண்புப் பெயர்களும் மிகுதியாகக் கலக்கும். வினைச்சொற்கள் குறைந்த அளவிலேதான் கலக்கும். இடைச்சொற்களைக் கடன் வாங்குதல் அரிது. துணைவினை, வேற்றுமை உருபுகள், வினைவிகுதிகள், ஆகியவை கடன் வாங்கப் பெறுதலில்லை.

பிறமொழிச்சொற்கள் வரையறையாற்றிக் கலக்கப் பெற்றுள்ளதாகக் கூறப்படும். ஆங்கில மொழியிலும் இலக்கணக் கலப்பில்லை. ஆங்கில மொழியின் இலக்கணக் கூறுகள் இடைச்சொற்கள் அனைத்தும் (Anglo Saxon) என்பதினின்றும் பெற்றவைகளே அன்றிப் பிற மொழியிலிருந்து வந்து புகுந்தவையல்ல என்பர் மொழியியலார்.

ஒரு மொழி பேசும் மக்கள் தாங்கள் பேசும்பொழுதும், எழுதும்பொழுதும் பிறமொழி இலக்கண இலக்கண அமைப்பைக் கடன் வாங்குதல் இயல்பு. பகைகொண்டு நாடுகவரும் மக்கள் தங்கள் மொழியைப் பரப்புதல் இயல்பு. ஒரு நாட்டின் அரசியல் மாறுதல்கள் அந்நாட்டு மொழியை விரைவாக மாற்றும்.

மொழியாக்கம் நாள்தோறும் புத்துணர்வு பெற்று, நானிலத்தில் கலைச்சொற்களை உருவாக்கும் புதுமை பூண்டு, என்றும் உயர்தனிச் செம்மொழியாக ஒளிர, தமிழ் நெஞ்சங்கள் கடமையாற்ற வேண்டும் என்பதை மனங்கொள்வோம்.

கி. இராமர்

தொகுப்பாளர்–அகரமுதலித்திட்ட இயக்ககம்

❖

# செங்காந்தள் - சில உண்மைகள்!

தமிழகத்தின் மாநில மலராகவும் ஜிம்பாவே நாட்டின் தேசிய மலராகவும் செங்காந்தள் உள்ளது. இது flame lily, climbing lily, creeping lily, glory lily,gloriosa lily, tiger claw, fire lily எனப் பலவாறாகப் பெயர் கொள்ளப்படுகிறது.

காந்தள் மலரும் கடலுப்பும் உறவானால் ஏந்துந்தனமியண்டு எய்தாவோ காந்தள்மலர் காட்டிலே பூ பூக்கும். கானலிலே காய் காய்க்கும் நாட்டிலே கண்டிருப்போம் நாம்.

இதன் பூ தீச்சுவாலை போலக் காணப்படுவதால் அக்கினிசலம் என்றும், இலைகளின் முனை சுருண்டு காணப்படுவதால் தலைச்சுருளி என்றும், பற்றி ஏறுவதால் பற்றியென்றும், வளைந்து பற்றுவதால் கோடல், கோடை என்றும் இம்மலர் அழைக்கப்படும்.

மாரிக்காலத்தில் முதலிலேயே வனப்பாய்த் தோன்றுவதால் தோன்றி என்றும் அழைக்கப்படும். சுதேச மருத்துவத்திலே இதனை வெண்தோண்டி எனவும் அழைப்பர். இதன் கிழங்கு கலப்பை போலத் தோன்றுவதால் கலப்பை எனவும் அழைப்பர். கார்த்திகை மாதத்தில் பூப்பதால் கார்த்திகை மலர் என்றும் கூறுவர்.

கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டில் இம்மலர் இடம்பெற்றுள்ளது. இதன் மலர்கள் ஏழு நாள்கள் வாடாமல் இருக்கும். ஆனால் ஓலைச்சுவடியில் சொல்லிய பெயர் யாராலும் குறிப்பிடப்படவில்லை என்பது வருந்துதற்குரியதே.

நேரடியாக இக்கிழங்கினை உட்கொள்ளக் கூடாது. ஏனெனில் அது நச்சுத்தன்மை கொண்டது. சிறிதளவு உட்கொண்டாலும் முடி உதிரும், தோல் நோய் வரும். மொத்த செடியின் பாகமும் நச்சுத்தன்மை கொண்டதே. வாந்தி, மயக்கம் தொடங்கி கோமா, லுகிமியே என மரணம் கூட உண்டாக வாய்ப்புள்ளது. கையால் பறித்தலே கூடாது என்கிறார்கள் சில அனுபவம் வாய்ந்த நாட்டு வைத்தியர்கள்.

கிழங்கு பிரிந்து கணுக்கள் உள்ளதை ஆண்காந்தள் என்றும் கணுக்களில்லாததைப் பெண்காந்தள் என்றும் குறிப்பிடுவர்.

பிரசவத்தின்போது நஞ்சுக்கொடி இறங்காமல் அவதிப்படும் பெண்களுக்குப் பச்சை செங்காந்தள் வேர்க்கிழங்கை அரைத்துத் தொப்புள், அடிவயிறு, உள்ளங்கை, உள்ளங்கால் போன்ற இடங்களில் தடவுவார்கள். உடனடியாக நஞ்சுக்கொடி இறங்கிவிடும். உடனே தடவி வைத்துள்ள பாகத்தை நன்றாகத் தண்ணீர் விட்டு சுத்தம் செய்துவிட வேண்டும்

வாதநோய், மூட்டுவலி, தொழுநோயைக் குணப்படுத்துவதுடன் பால்வினை நோய், வெண்குஷ்டம் போன்றவற்றைக் குணப்படுத்தவும் இது பயன்படுத்தப்படுகிறது.

உலர்ந்த கிழங்கை நாள்தோறும் புதிய கோமியத்தில் மூன்று நாள்கள் ஊறவைத்து மெல்லிய வில்லைகளாக அரிந்து உப்பிட்ட மோரில் போட்டு இரவில் ஊறவைப்பதும் பகலில் உலர்த்துவதுமாக



7 நாள் செய்ய அதிலுள்ள நஞ்சு விலகும். பாம்பு கடித்தவர்களுக்கு இதில் ஒரு சிறிய துண்டை மென்று தின்னக் கொடுக்க விஷம் கால் அல்லது அரை மணி நேரத்திற்குள் இறங்கும்.

நினைத்தபடி குணம் ஏற்படவில்லையென்றால் உணவின் 3 மணி நேரத்திற்குப் பின் மீண்டும் ஒருமுறை முன் போல் கொடுக்க உடனே குணப்படும். தவிர தலைவலி, கழுத்துவலி, குட்டம், வயிற்று வலி, சன்னி, கரப்பான் முதலியன நீங்கும்.

அரைப்பலம் பச்சைக் கிழங்கைச் சிறு துண்டுகளாக அரிந்து 5 பலம் வேப்பெண்ணெயில் போட்டுச் சிறு தீயாக எரித்துக் கிழங்கு வில்லைகள் மிதக்கும் தறுவாயில் ஆற விட்டு வடித்து, காற்றுப்புகா பாத்திரத்தில் வைத்து இதனைப் பாரிசவாயு, தலைவலி, கழுத்து நரம்புகளின் இசிவு, கணுச் சூலை முதலியவற்றிக்குத் தேய்க்கக் குணமாகும்.

இது சக்தி தரும் டானிக்காகவும் இருப்பதுடன், தலையில் வரும் பேன்களை ஒழிக்கவும் பயன்படுகிறது. காய வைக்கும் போது இதன் நொடியை சுவாசிக்காமல் இருப்பது நல்லது.

சிறு துண்டுகளாக அரியும் போதும் கண்களின் கவனம் வேறு பக்கமாக இருக்கும்படியாகப் பார்த்துக்கொள்ளவும். அரியும் போது வரும் நெடி கண்களில் எரிச்சலை உண்டாக்கும். இதனால் பல இன்னல்களைப் பின்நாளில் சந்திக்க நேரிடும். கவனம்

முக்கியமான குறிப்பு: பலன் தரும் அனுபவ முறை காந்தள் கிழங்கை 1400 கிராம் மற்றும் கந்தகம் 120 கிராம் இரண்டையும் கல்வத்தில் அரைத்து நிழலில் உலர்த்தி குழித்தைலம் தயார் செய்து பின் வாலைரசம் அல்லது பாதரசம் சுத்தி செய்து 60 கிராம் எடுத்து ஏற்கெனவே குழித்தைலம் வைத்ததை விட்டு அரைத்து வந்தால் வெண்ணெய் போல் ஆகும்.

பின் அரைத்ததை வில்லைகளாகச் செய்து காய வைத்து எடுத்தால் உலோக ஓசை உண்டானால் சரியாகப் பக்குவமாகச் செய்து விட்டீர்கள் என்று உறுதி செய்து கொள்ளலாம்.

பின் அதனைச் சட்டியில் இட்டு ஏழு சீலைமண் செய்து லகுபுடமிட்டால் ரசம் வெள்ளையாக, பற்பமாக மாறி இருக்கும்.

மேற்படி பற்பத்தை 0.50 மில்லி கிராம் தேனில் குழைத்து நாள்தோறும் இருமுறை உணவுக்கு முன்பு சாப்பிட புற்றுநோய், தொழு நோய், கடுமையான தோல் நோய், நாட்பட்ட மேக ஊரல், கரப்பான் நோய், குன்மம், சூலை நோய், வாத நோய், கலப்பு நோய், பௌத்திரம் மற்றும் தீராத எந்த வகை நோயானாலும் நீங்கும்..

இது புற்றுநோய்க்குக் கிடைத்த ஒரு மாபெரும் பொக்கிஷம் என்றே சொல்லலாம்.

குறிப்பு:

பஞ்ச உபவிஷத்தில்.. செங்காந்தளும் ஒன்று என்பதை மறவாதீர்கள்..

பஞ்ச உபவிஷங்கள் என்பது. .1)எருக்கு, 2) சதுரக் கள்ளிப்பால், 3)எட்டி, 4) கலப்பைக் கிழங்கு(செங்காந்தள்) , 5)அரளி ஆகும்

– மரு.க.இளவரசன்
சித்த மருத்துவர்

❖




தமிழ்க் கலைக்கழகத்தின் 77ஆவது கூட்டத்தில் சிறப்பு அழைப்பாளர்களான புதுதில்லி, மத்திய வர்த்தக அமைச்சக அலுவலர் திருமதி. அ.சாரதாமணி, அம்பத்தூர் கம்பன் கழகத் தலைவர் திரு. பள்ளத்தூர் பழ.பழனியப்பன் ஆகியோருடன் அலுவல்சார் (ம) அலுவல்சாரா உறுப்பினர்கள் பங்கேற்றனர்.

# சொல்லாக்க உத்திகள்

இந்திய நாட்டின் விடுதலைக்குப்பின் ஆங்கிலேயர்கள் வெளியேறினாலும் அவர்கள் விட்டுச் சென்ற ஆங்கிலத்தின் பயனால் இன்று பலதுறைகளில் தமிழர்கள் தன்னிகரற்று விளங் கினாலும், ஆங்கில மொழிக்கே வலுவும் வளமும் சேர்த்து மேன்மைப்படுத்தி வருகிறோம். தாய் மொழியில் சிந்தித்து அறிவியலில் சிறப்பான பல கண்டுபிடிப்புகளைத் தரமுடியும் என்பது அறிஞர்முடிபு. இன்று தமிழுக்கு ஆக்கமும் ஊக்கமும் சேர்ப்பதற்குச் செயற்படுத்தப்பெறும் 'சொற்குவை' என்ற இந்த அரிதற்கரிய முயற்சி தமிழ்மொழிக் காப்பிற்கு மிகச்சிறந்த பங்களிப்பாகும்.

அண்மையில் ஆங்கிலச் சொற்கள் இரண்டு என் கவனத்தை ஈர்த்தன. ஒன்று HANGRY என்பது. HUNGER+ANGRY–பசியுடன் வருகின்ற சினத்துக்கான புதுச்சொல்லானது. மற்றொன்று FRENEMIES; FRIENDS+ENEMIES தமிழில் இதுபோன்று இயலுமா என்று தோன்றிற்று. நட்புகள் + பூக்கள் – நட்பூக்கள் என்று இருக்கலாமே எனத் தோன்றிற்று. கலப்பாக்கச் சொற்கள் இவை. நட்பு, பகை என்று சிந்தித்தபோது 'மொழிஞாயிறு' பாவாணர் தனது திருக்குறள் மரபுரையில் 'நொதுமல்' என்ற சொல்லைக் கையாண்டிருப்பார். இச்சொல் பொதுநிலையில் இருத்தல்; நட்பும்இல்லை, பகையும் இல்லை என்பதைக் குறிப்பது.

இலக்கியங்களில் கையாளப்பட்டிருக்கும் சொற்களைத் தெரிந்து, தேர்வுசெய்து சொல்லாக்கத் திற்குப் பயன்படுத்தலாம். "உற்றவன், தீர்ப்பான், மருந்து, உழைச்செல்வான் என அப்பாற் நாற்கூற்றே மருந்து" என்று 'மருந்து' அதிகாரத்தில் 950 ஆவது குறளில், திருவள்ளுவர் பகுத்திருப்பார். இதிலே 'உழைச்செல்வான்' என்பது யாரைக் குறிக்கின்றது? உழைப்பவன் / உடனிருப்பவன் / உதவியாளன்/ உதவுபவன்/ செவிலியப்பணி அந்தக் காலக்கட்டத்தில் இருந்திருக்க வாய்ப்பில்லை. எனவே இந்தச்சொல் உற்றுநோக்க வேண்டிய சொல்லாட்சியாகும்.

திருமூலர் தனது திருமந்திரத்தில் மருந்து நால்வகையில் பயன்படும் என்றார்.

"மறுப்பது உடல்நோய் மருந்தென லாகும்
மறுப்பது உளநோய் மருந்தென சாலும்

மறுப்பது இனிநோய் வாரா திருக்க
மறுப்பது சாலை மருந்தென லாமே"



மரு.அ.செந்தில்
தலைவர் (2020), இந்திய குழந்தை மருத்துவக் குழுமம்,
தமிழ்நாடு மாநிலப் பிரிவு
உலகமதி மருத்துவமனை
நெய்வேலி – 607 308

PHYSICAL / MENTAL / PREVENTIVE / IMMORTALITY

மேலும் சித்தமருத்துவமுறைகளில் அகமருந்து, புறமருந்து எனப் பகுக்கப்பட்டுள்ளது. அகமருந்து உட்கொள்வது, புறமருந்து வெளிமருந்து.

மேலும் கலைச்சொல்லாக்கத்திற்கு மொழியாக் கமும், சொல்லாக்கமும் புதுச்சொல் உருவாக்கமும் தேவையானதாகும்.

TRANSLATION / TRANSCREATION

எடுத்துக்காட்டாக, மருத்துவத்துறையில் X-RAY என்ற சொல்லிற்கு நுண்கதிர்/ உருகதிர்/ ஊடுகதிர் – எதைத் தேர்வு செய்யலாம்?

மருத்துவத்துறை சார்ந்த அறிவியல் கூறுகளையும், நுட்பங்களையும் தெரிந்துகொண்டு, அவற்றின் முறைமைகளைப் புரிந்துகொண்டு, எளிமைப்படுத்தி புதியசொற்களை உருவாக்க வேண்டும். இதற்குத் தடையாக இருப்பது ஆங்கில மருத்துவத்தை ஆங்கில வழியில் உள்வாங்கி இருப்பதால், அதில் மட்டுமே சிந்தித்து மாற்றங்களை

ஏற்படுத்தாமல் தேங்கிப் போவதாகும். இந்த மனத்தடை அகற்றப்பட வேண்டும். ‘‘அடுத்து, கூட்டாக்கச் சொற்கள் உருவாக்கத்திற்கான எடுத்துக்காட்டு:

1. CATH LAB – குருதிநாள உட்செலுத்தி கதிரியக்க ஆய்வகம்

2. INTERVENTIONAL CARDIOLOGIST – அக மருத்துவ நெஞ்சநோய் மருத்துவநிபுணர்

புத்தாக்கச் சொற்கள் மக்களின் பயன்பாட்டுக்கும், புரிதலுக்கும் பேச்சுவழக்கில் வருவதற்கும் எளிமையாக இருத்தல்வேண்டும்.

CAT SCAN – முப்பரிமாண உருப்பிரிவு கணினி வரைவி

எளிமைப்படுத்தினால் சுருக்கமாக – கணினி வரைவி என்று கூறலாம்.

MRI SCAN. - காந்தவரைவி - USG SCAN - உருவக வரைவி எனலாம்.

மொழியாக்கத்திற்கான சொற்கள்:

நுண்ணுயிரிகளை ஆய்வகத்தில் வளர்க்கும் இருவகைகள்:

1. AEROBIC CULTURE – வளிநாடும் வளர்ப்பு

2. ANAEROBIC CULTURE – வளி நாடா வளர்ப்பு

3. STAINING – நிறமேற்று

மாற்றம் வேண்டும் சொற்கள்:

தீவிர சிகிச்சைப்பிரிவு – ஆழ்கவன மருத்துவப்பிரிவு (ICU) INTENSIVE CARE UNIT

குருதிநாளங்களை தமனி, சிறை என்று இருவகைப் படுத்துவர். உயிர்வளி ஏற்றிய நாளங்கள்–தமனி– கரியமில வாயுவோடு உடலை விட்டு வெளியேற வேண்டியது குருதி–சிறை–சிறை – எப்படி வந்திருக்கும்?. உயரே வானத்தில் பருந்து வட்டமிடுகிறது. கோழி தன் குஞ்சுகளைச் சிறகுகளுக்குள் காப்பாற்றுகிறது, சிறை வைத்துக் காக்கிறது. குருதியைக் குழாய்க்குள் வைத்திருந்து எடுத்துச்செல்வதால்அப்படி.

அடுத்து, குழந்தை மருத்துவத்துறை – NEWBORN, NEONATE – பிறந்தகுழந்தை, கைக்குழந்தை, புதுக்குழந்தை, குழவி.

“மோட்டு எருமை முழுக்குழவி“ –என்பது பட்டினப்பாலை

ADOLESCENT, TEENAGE – குறிக்கும் தமிழ்ச்சொல் தேடினோம். –பதின்மப்பருவம், விடலைப்பருவம், வளரிளம்பருவம்

இவ்வாறு, இலக்கண – இலக்கியச்செழுமை, வட்டாரவழக்கு, வழக்கிழந்த சொற்களை மீட்டல், தமிழ்முறை மருத்துவம், சித்தமருத்துவ அறிவும் விரிவும் தெளிவும் இருந்தால் அகன்ற பார்வையுடன்சொல்லாக்கம் நடக்கும்.

❖

## ஃப்ளோரிடா பல்கலையில் தமிழ் மற்றும் புலம்பெயர் தமிழருக்கான நடுவம்

ஃப்ளோரிடா பல்கலைக்கழகத்தில் தமிழ் மற்றும் புலம்பெயர் தமிழருக்கான நடுவத்தை நிறுவுவதற்கான முயற்சியை முன்னெடுத்துச் செயற்பட்டுவருகிறார் ஃப்ளோரிடா பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் முனைவர் கலைமதி.

புலம்பெயர்ந்த தமிழ் மாணவர்கள் தமிழைக் கற்க உதவுவது, தலைசிறந்த பல்கலைக்கழகங்களில் தமிழ் மற்றும் தமிழர் சார்ந்த உயர் ஆய்வுகளை மேற்கொள்வது, தொடர் ஆய்வுகளின் வழியாக ஆய்வுத் தரத்தை உயர்த்துவது உள்ளிட்ட பணிகளை இந்த நடுவம் மேற்கொள்ளும் என்று முனைவர் கலைமதி தெரிவித்துள்ளார்.

நன்றி– தி தமிழ் இந்து நாளிதழ்



# இல்லத்தரசிகள் பங்குபெற்ற இல்லந்தோறும் இனிமைத் தமிழில் பேசுவோம் - தொடக்க விழா

கோவை இனிமைத் தமிழ் இல்லத்தரசிகள் சங்கம் மற்றும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் இணைந்து நடத்திய ‘இல்லந்தோறும் இனிமைத் தமிழில் பேசுவோம்’ என்ற தலைப்பிலான இணையவழிக் கருத்தரங்கம் 23.01.2021ஆம் நாள் நடைபெற்றது.

இல்லத்தரசிகள் பங்குபெற்ற இக்கருத்தரங்கத்தினைத் தொடங்கி வைத்த செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் தங்க.காமராசு அவர்கள் தம் தொடக்கவுரையில், “தமிழின் தொன்மை மற்றும் சிறப்புகள் குறித்தும், நம் மொழியில் பேசுவதே நமக்கு உயர்வினைத் தரும் என்றும், குழந்தைப் பருவத்திலே நாம் தாய்மொழியின் சிறப்பை மழலைகளுக்கு எடுத்துரைத்து அவர்களைத் தூயதமிழில் பேச பயிற்சியளித்து அவர்களையும் இளைஞர்களையும் செம்மைப்படுத்த வேண்டும் என்பதே இந்த இல்லத்தமிழ் இயக்கத்தின் முகாமையான நோக்கமாகும்” என்று கூறினார். வரவேற்புரை வழங்கிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் தொகுப்பாளர் திருமதி.ஜெ.சாந்தி அவர்கள், இக்கூட்டம் திங்களுக்கு இருமுறை நடக்கவிருப்பதாகக் கூறினார்.

நிகழ்வில் வாழ்த்துரை வழங்கிய திருச்சி, புதூர், பிஷப் ஹீபர் கல்லூரியின் இணைப்பேராசிரியர் முனைவர் மு.ஜோதிலட்சுமி மற்றும் சென்னை, எத்திராஜ் மகளிர் கல்லூரித் தமிழ்த்துறையின் உதவிப் பேராசிரியர் முனைவர் ப.வனிதா ஆகிய இருவரும், தாய்மொழியின் தொன்மை பற்றியும், தமிழ் பேசுதலின் முகாமையைக் குறித்தும், இல்லங்களில் இருந்தே தமிழ் புத்துயிர் பெற்றுத் தனித்துவம் அடைய வேண்டும் என்றும் பேசினார்கள்.

நிறைவாக, நன்றியுரையாற்றிய கோயம்புத்தூர், ஹைஃகான் மெஷின், வடக்கு மண்டல மேலாளர், முனைவர் அ. ஷர்மிளா பானு அவர்கள், இக்கருத்தரங்கில் இங்கிலாந்து உள்ளிட்ட அயல்நாடுகளிலிருந்தும் பலர் பங்கேற்றதே இந்நிகழ்ச்சியின் பெரும் வெற்றியாக அமைந்ததாகவும், தமிழ்மொழி மீது அனைவருக்கும் உள்ள ஈடுபாட்டையே இது காட்டுவதாகவும் கூறினார். நிகழ்வை முனைவர் ஆ. இந்திரா பிரியதர்ஷினி நெறிப்படுத்தினார்.

பங்குபெற்ற இல்லத்தரசிகள்:

பேச்சாளர் த.ஷண்முகப்பிரியா–ஈரோடு,

மருத்துவர் தேவி–அவினாசி,

பேச்சாளர் சே.ஜீவிதா–சேலம்,

கவிச்சுடர் மதிவதினி–கோவை,

திருமதி அ.பர்வீன் பானு–கோவை,

பேச்சாளர் சு.வைஷ்ணவி–கோவை

திருமதி பூங்கோதை ராதா–கோவை,

செல்வி ஜீ.பானுமதி–கோவை,

திருமதி ச.காயத்ரி தேவி–இங்கிலாந்து,

மருத்துவர் மு.நிர்மலா–இங்கிலாந்து,

கவிஞர் தெ.சுதா–ஈரோடு,

திருமதி காயத்ரி யோகேஷ்–இங்கிலாந்து,

பேச்சாளர் அ.ஷிரீன்சித்தாரா–இங்கிலாந்து,

திருமதி அ.தில்ஷாத் பானு–இங்கிலாந்து,

திருமதி அ.முபாரக்–கோவை,

திருமதி புவனேஸ்வரி சுப்பிரமணி–பெங்களூரு,

பேராசிரியர் ப.சாந்திபிரியா–கோவை,

திருமதி செல்வி செந்தில்குமார்–கோவை,

பேச்சாளர் ச.ஸ்ருதி–கோவை,

திருமதி ச.எழிலரசி–கோவை,

பேச்சாளர் சு.ரீத்திகா–வேலூர்,

திருமதி நாஜிரா–கோவை,

கவிஞர் விஜி மோகன்–கோவை,

திருமதி உஷா–கோவை,

பேச்சாளர் அனுராகா–கோவை.

# எத்தனை காலம்தான் இதனை மறைப்பது ?

உலக அளவில் கல்வி மற்றும் உளவியல் வல்லுநர்கள் தாய்மொழிக் கல்வியின் இன்றியமையாமையை வலியுறுத்தியுள்ளனர். இங்கே மகாத்மா காந்தி மற்றும் கவி தாகூர் போன்றவர்கள் கூறியும்யாரும்ஏற்றுக்கொண்டதாகத்தெரியவில்லை. இந்தியாவில் கடந்த 50 ஆண்டுகளில் 200 மொழிகள் மக்கள் பேச்சு வழக்கிலிருந்து காணாமல் போய்விட்டன என்று ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

குஜராத் மாநிலம் வதோதராவைத் தலைமையிடமாகக் கொண்டு செயல்பட்டு வரும் ‘பாஷா’ என்கிற ஆராய்ச்சி மற்றும் வெளியீட்டு நிறுவனம், கடந்த 2011 முதல் ஆய்வு நடத்தி வருகிறது. இந்த ஆய்வின் முடிவு என்ன தெரியுமா ? இந்தியாவில் ஏற்கெனவே புழக்கத்தில் இருந்த மொழிகளில் 20 விழுக்காடு அழிந்திருப்பது தெரியவந்துள்ளது. இந்த ஆய்வில் மொத்தம் 780 மொழிகள் மட்டுமே கண்டறிய முடிந்தது என்றும், கண்டறிய முடியாமல் விடுபட்ட மொழிகளையும் கணக்கில் எடுத்துக்கொண்டால், இந்தியாவில் இப்போது 100 மொழிகள் புழக்கத்தில் இருக்கின்றன என்ற முடிவுக்கு வந்திருக்கிறோம் என்றும் ஆய்வின் ஒருங்கிணைப்பாளர் கணேஷ்தேவ் கூறியுள்ளார்.

உலக அமைப்பான ஐ.நா.வின் யுனெஸ்கோ மையம் ‘தாய்மொழி நாள்’ கொண்டாட அறிவுறுத்துவதன் நோக்கமும் இதுதான். உலக அளவில் மறைந்து கொண்டிருக்கும் மொழிகளை மீட்டெடுப்பதற்கு இது பயன்படும். இவ்வாறு அழிந்து கொண்டிருக்கும் மொழிகளில் தமிழும் ஒன்றாக இருந்துவிடக் கூடாது என்று கவலைப்படுகின்றனர்.

இப்போது தமிழ்ப்பாட நூல்களில், தமிழ் எண்களை ‘அரபு எண்கள்’ என்றே வெளியிட்டு வருகின்றனர். இதில் வினாக்களையும் கேட்டு மாணவர்களுக்குத் தவறாக வழிகாட்டுகின்றனர். தொடக்கப்பள்ளி முதல் உயர்நிலைப் பள்ளி வரை அரசாங்கம் வெளியிட்டுள்ள தமிழ்ப்பாட நூல்களில் பயிற்சி வினாக்களாக ‘பொருத்துக’ என்ற தலைப்பில் அரபு எண்கள்– தமிழ் எண்கள்’ எனக் குறிப்பிடப்பட்டு வருகின்றன. இப்போது உலகம் எங்கும் வழக்கில் இருக்கும் 1 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10 ஆகிய எண்கள் அரபு எண்கள் என்றும், க. உ, ங, ச, ரு, சா, எ, அ, கூ, க, க0 ஆகிய எண்கள் தமிழ் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. இது பிழையான பாடமாகும்

இப்போது வழக்கில் இருக்கும் 1, 2, 3 என்னும் எண்கள் இந்திய எண்கள் என்பதும், அதிலும் தமிழ் எண்கள் என்பதும் தமிழ் வரலாறும், கல்வெட்டுகளும் கற்றவர்கள் நன்கு அறிவர். ஆயினும் இது தமிழ் மக்களிடையேயும் எடுத்துக் கூறப்படவில்லை. தொடர்ந்து இந்த வரலாற்றுப் பிழை நிகழ்ந்து வருகிறது



புலவர் உதயை மு.வீரையன்

1961–ஆம் ஆண்டு புது தில்லியில் மத்தியக் கல்வி ஆலோசனைக் குழுக் கூட்டம் நடைபெற்றது. அப்போது, இந்தியாவில் கல்வி தொடர்பாக உலகத்தில் வழங்கி வரும் அராபிய எண்களையே பயன்படுத்துவது என்று முடிவு செய்யப்பட்டது. இதனைக் கண்டித்து பாரதிதாசன் தம் ‘குயில்’ ஏட்டில் 24.01. 1961 அன்று, ‘அராபிய எண்கள் தமிழ் எண்களே’ என்று எழுதியுள்ளார்

‘ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழ் வரிவடிவம் எப்படி இருந்தது என்பதை அரசினர் ஆராய்ச்சித் துறையின் சுவடியில் காண்க. கண்டால் இன்றைய 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10 ஆகியவை தமிழ் எழுத்துகளே என்பதைத் தெரிந்து கொள்ளலாம்’ என்று விளக்கிக்கூறிய பாரதிதாசன், இந்தத் தமிழ் எண்களை ‘அராபிய எண்கள்’ என வழங்குவதன் காரணத்தையும் விவரித்துள்ளார்.

‘இந்தத் தமிழ் எண்களை இங்கு வணிகத் தொடர்புடைய அராபியர் கொண்டு போயினர். அவர்களிடமிருந்து மேல்நாட்டினர் கற்றுக் கொண்டனர். ஒரு மாற்றமும் செய்யாமல் அவர்கள் அப்படியே எடுத்தாண்டனர். அவர்கட்குக் கிடைத்த அன்றைய உருவமே இன்றைய உருவம். ஆனால், தமிழகத்தில் அந்த உருவம் நாளடைவில் மாற்றத்திற்கு உள்ளாயிற்று. இது இயற்கைதான்...’ என்றும் எழுதியுள்ளார். இந்த உண்மை உலகத்துக்குத் தெரியாமல் போனது ஏன் ?

டாக்டர் மு. வரதராசனார் தமது ‘மொழி வரலாறு’ என்னும் நூலில், 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9,10 என்ற இந்த எண்கள் தமிழ் எண்களே என்பதைக் கல்வெட்டுத் துணை கொண்டு நிறுவியுள்ளார்

‘1,2 3, 4, 5, 6, 7, 8, 9 என இன்று உலகமெங்கும் எழுதப்படும் எண்கள் அரபி எண்கள் என்று கூறப்படுகின்றன. ஆனால், அரபியர்களுக்கு இந்த எண்களின் பழைய வரலாறு பற்றி ஒன்றும் தெரியவில்லை. அவர்கள் இவற்றை இந்திய எண்கள் என்கிறார்கள். வடநாட்டு அறிஞர்களுக்கு இவற்றின் தோற்றம் பற்றி ஒன்றும் விளங்கவில்லை, தமிழ்நாட்டின் பழைய எண் வடிவங்களைப் பற்றி இவர்கள் அறியாமல் இருத்தலே இவ்வாறு அனைவரும் தடுமாறுவதற்குக் காரணம் ஆகும். அரபி எண்கள் என்றும், இந்திய எண்கள் என்றும் இவ்வாறு தடுமாறிக் கூறப்படும் அந்த எண்கள் (1, 2, 3 முதலியவை) பழைய தமிழ் எண்களே என்பது பழந்தமிழ் எண் வடிவங்களை நோக்கின் உணரப்படும். (ஆதாரம்: “மொழி வரலாறு” (பக்.158, 159 )

இவ்வாறு இந்த எண்கள் தமிழ் எண்களே என்பதற்கு மறுக்க முடியாத ஆதாரங்கள் இருக்கின்றன. அத்துடன் அரபு மொழிக்கெனத் தனி எண் வடிவங்கள் உள்ளன. அம்மொழி வல்லாரும் அதற்கு உரிமை கொண்டாடவில்லை




அறியாமையின் காரணமாக இவ்வாறு கூறப்படுகின்றன. உண்மையை எத்தனை காலம் தான் மறைக்க முடியும் ?

தமிழக அரசும், கல்வித் துறையும் இதனைக் கவனத்தில் கொள்ள வேண்டும். பாடநூல் குழுவில் தேர்ந்த அறிஞர்களை நியமித்துக் கண்காணிக்க வேண்டும்.



தமிழ்க் கலைக்கழகத்தின் 78ஆவது கூட்டத்தில் சிறப்பு அழைப்பாளரான மனநல ஆலோசகர் (ம) சமூகச் செயற்பாட்டாளர் திருமதி. வெற்றிச்செல்வி மற்றும் அலுவல் சார், அலுவல் சாரா உறுப்பினர்கள் பங்கேற்றனர்.

# மூத்ததயிர் உண்போம்



மரு. கிருஷ்ணபிரியா
வர்ம மருத்துவம்
பட்டமேற்படிப்புத் துறை
தேசிய சித்த மருத்துவ நிறுவனம்
சென்னை – 600 047.



மரு. மூ.வீ. மகாதேவன்
விரிவுரையாளர்
சிறப்பு மருத்தவத் துறை
தேசிய சித்த மருத்துவ நிறுவனம்
சென்னை – 600 047.

சித்த மருத்துவம் இந்தியாவின் பண்டைய மருத்துவ முறைகளில் ஒன்றாகும். சித்த மருத்துவத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் பஞ்ச பூதங்கள், முத்தாதுக்கள், அறுசுவைகளாகும். சித்த மருத்துவம் 18 சித்தர்களால் உருவாக்கப்பட்டது. ஆரோக்கியத்தை மேம்படுத்துவதிலும் மற்றும் நோய்களை பரிகரிப்பதிலும் உணவு மற்றும் வாழ்க்கை முறையில் ஒரு அங்கமாக இருக்கின்ற மருத்துவம். அக்கால உணவு முறைகள் அறுசுவையின் அடிப்படை கொண்டே இருந்து வந்தன. உடல் தாதுவைப் பெருக்க, சமன் செய்ய அதற்கு ஏற்றவாறு உணவு வகைகளை தயாரித்து வந்தனர். இதனை "உணவே மருந்து மருந்தே உணவு" எனக் கூறுவார்கள்.

பதினெண் சித்தர்களுள் ஒருவரான தேரன் கூறிய பிணியணுகா விதியில்,

"மூலஞ்சேர் கறி நுகரோம்; மூத்ததயிர் உண்போம்"

புளித்த தயிரைப் பெருக்கி உண்ண வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது.

பாலை நன்றாகக் கொதிக்கவைத்து, பின் ஆறவைத்து, சிறிது தயிரைப் பிரை இட ஆறு முதல் எட்டு மணி நேரத்தில் தயிராக மாறும். அதிகமாகப் பிரை இட்டால் தயிர் மிக்க புளிப்படையும், மிதமாக ஊற்றினால் தயிர் இனிப்பாக இருக்கும். புளித்த தயிர்தான் உடலுக்கு நன்மை உண்டாக்கும். தயிரில் கால்சியம் (calcium), இரும்புச் சத்து (iron), பொட்டசியம் (potassium), புரதம் (protein), வைட்டமின் B6 (vitamin b6), ப்ரோபையாடிக் ஆகியவை உள்ளன. தமிழ் மக்கள் குறைந்தது கடந்த 5000 ஆண்டுகளாகத் தயிரை தயாரித்தும் உண்டும் வந்திருக்கின்றனர். தமிழரின் உணவு முறைகள் உலகின் சிறந்த உணவு முறைகளில் ஒன்றாகும். இதில் ஒன்றுதான் பாலும் பால் சார்ந்த பொருட்களும் . அவை பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் என்பனவாகும்.

தயிர்– பொதுக்குணம்:

"தயிருணப் பயித்திய சஞ்சல மகற்றி மெய்
யெயிலென வின்பமு மெய்திடப் புரியும்"

– தாது ஜீவ வகுப்பு

பித்தாதிக்கத்தினால் உண்டாகும் சாதாரண நோய்களை எல்லாம் ஒழித்து உடம்பிற்கு உறுதியையும் சுகத்தினையும் உண்டாக்கும்

தயிரின் வகை:

பசுவின் தயிர், ஆடையெடுத்த தயிர், எருமை தயிர், வெள்ளாட்டுத் தயிர், செம்மறியாட்டுத் தயிர், ஒட்டகத் தயிர்

தயிர் வகையின் பயன்கள்: (Ref : நோயில்லா நெறி)

பசுவின் தயிர் – பசி உண்டாகும், அசீரணம், எரிச்சல், தாகம் நீங்கும்

ஆடையெடுத்த தயிர் – மூத்திரகிரீச்சிரம், ஆயாசம், சிலேஷ்மநோய் நீங்கும்

எருமை தயிர் – எரிச்சல், பித்த நோய் போகும், கண் குளிர்ச்சி உண்டாகும்

வெள்ளாட்டுத் தயிர் – அதிக நன்மை உண்டாகும்

ஒட்டகத் தயிர் – தாகம், மலக்கிருமி நீங்கும்.

நீர் சுருக்கி, மோர் பெருக்கி உண்ண வேண்டும். வெயில் காலத்தில் உடலின் நீர்த் தன்மை குறையும் போது இவ்வாறு பயன்படுத்தலாம்.

தயிரில் ஒரு வகையான ப்ரோபையாடிக்ஸ் உள்ளது. நாம் எடுத்துகொள்ளும் தயிரின் மூலம் உடலுக்கு நோய் எதிர்ப்பு சக்தி அதிகரிதல், செரிமான மண்டலம், நரம்பு மண்டலம் ஆகியன வலுப்பெறும். அதிகளவு நுண்ணுயிர்க்கொல்லி மருந்துகளை எடுத்துக் கொள்ளும் போது, குடலில் சஞ்சரிக்கும் நன்மை செய்யும் பாக்டீரியாக்கள் வெகுவாக அழிந்துவிடும். அதற்குத் தீர்வாக நுண்ணுயிர்க்கொல்லி மருந்துகளுடன் ப்ரோபையாடிக்ஸ் உணவுகள் அல்லது மருந்துகளைக் கொடுக்கலாம்.

தயிர் உண்ணக் கூடாதவர்கள்:

கண்நோய்கள் (Eye disease), வாதகுன்மம் (Peptic ulcer), காமாலை (Jaundice)

கழிச்சல் (Diarrhoea), பீனிசம் (Sinusitis), சோபை (Splenomegaly), மூக்குநீர்ப் பாய்ச்சல் (Rhinitis)

காய்ச்சல் (Fever) உள்ளவர்கள் தயிர் உண்ணக் கூடாது. கலாச்சார மிக்க தமிழ் மக்களின் உணவு முறைகள் மிகவும் சிறப்பு வாய்ந்தவை. இக்கொரோனா காலக்கட்டத்தில், உடலுக்கு நோய் எதிர்ப்பு சக்தி அதிகரிக்க நமது பாரம்பரிய உணவு முறையே உதவுகிறது. இதில் தயிர் ஒரு அங்கமாக விளங்குகிறது. தயிரை முறையாகக் காலதேச மாறுபாட்டுக்கு ஏற்ப எடுத்துக்கொண்டால் நோய் வரும் முன் காப்பதற்கும் வந்த நோயை நீக்கவும் செய்யும். தயிரின் மருத்துவக் குணத்தையும் அவற்றை பயன்படுத்தும் முறைகளையும் நாம் பார்த்தோம். அதை நாமும் அன்றாட வாழ்வில் கடைப்பிடித்து ஆரோக்கியமான வாழ்வை வாழலாம். ❖

# தேவநேயப் பாவாணர் விருது!

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் 2020ஆம் ஆண்டுக்கான “தேவநேயப் பாவாணர்” விருதினை முனைவர் கு.சிவமணி அவர்களுக்கு மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு.எடப்பாடி கே.பழனிசாமி அவர்கள் 01.02.2021ஆம் நாள் தலைமைச் செயலகத்தில் நடைபெற்ற விழாவில் வழங்கிச் சிறப்பித்தார். விருதுத் தொகையான ரூ. ஒரு இலட்சத்திற்கான காசோலை, தங்கப்பதக்கம், தகுதியுரை மற்றும் பொன்னாடை ஆகியவற்றையும் முதலமைச்சர் அவர்கள் வழங்கிச் சிறப்பித்தார்.

முனைவர் கு. சிவமணி 01.08.1932இல் தஞ்சாவூரில் பிறந்தவர். 1957ஆம் ஆண்டு கல்லூரி முதல்வராகத் தொடங்கி 2014இல் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தில் ஆய்வறிஞராகப் பணியாற்றியதோடு பல்வேறு கல்லூரிகளிலும் பேராசிரியராகவும், ஆய்வு நிறுவனங்களிலும் பணியாற்றியவர்.

1976இல் சட்ட ஆட்சிமொழி ஆணையரகத்தில் மொழிபெயர்ப்பாளராகவும், மொழி வல்லுநராகவும் பணியாற்றினார். நடைமுறை ஆட்சிச்சொல் கையேடு, சட்டச்சொல் அகராதி, சட்ட ஆட்சிச் சொற்களஞ்சியம் என ஐம்பதுக்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளையும், 25 நூல்களையும் உருவாக்கியுள்ளார்.

தேவநேயப் பாவாணர் விருதினைப் பெற்றுள்ள முனைவர் கு.சிவமணி அவர்களுக்கு அகரமுதலி இயக்ககம் தனது வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறது.




# வீரமாமுனிவர் விருது!



வீரமாமுனிவர் வழியில் தமிழ் அகராதிப் பணிகளில் ஈடுபட்டுவரும், தமிழரல்லாத பிறநாட்டினருக்குச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பாக வழங்கப்படும் 2020ஆம் ஆண்டுக்கான “வீரமாமுனிவர் விருதிற்கு” முனைவர் கிரிகோரி ஜேம்சு அவர்கள் தேர்வாகியுள்ளார். தற்போதுள்ள பெருந்தொற்றுக் காரணமாக அவரால் நேரடியாகச் சென்னை வந்து 01.02.2021ஆம் நாள் தலைமைச் செயலகத்தில் நடைபெற்ற விழாவில் இந்த விருதினைப் பெற இயலவில்லை.

முனைவர் கிரிகோரி ஜேம்சு (GREGORY JAMES) 26.12.1947இல் இங்கிலாந்தில் பிறந்தவர். மொழியியலில் முதுகலை, ஆய்வியல் நிறைஞர், அறிவியலில் முதுகலை, முனைவர் பட்டங்களைப் பெற்றவர். ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கொண்டவர். ஏழு அகராதி நூல்களைத் தொகுத்தவர். 26 பன்னாட்டு ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார்.

தமிழ் அகராதித்துறையை ஆராய்ந்து தமிழ் அகராதி வரலாறு (A History of Tamil Dictionaries) என்ற விரிவான நூல் ‘சொல்பொருள்’ (COLPORUL) என்ற பெயரில் வெளியிட்டுள்ளார்.

வீரமாமுனிவர் விருதிற்குத் தேர்வாகியுள்ள முனைவர் கிரிகோரி ஜேம்சு அவர்களுக்கு அகரமுதலி இயக்ககம் தனது வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறது.

❖

# ஆள்காட்டிப் பறவையின் மருத்துவக்குணம்



கணந்துள் என்று சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள ஆள்காட்டிப் பறவையின் இறைச்சி மற்றும் அதன் முட்டையிலுள்ள மருத்துவக் குணம் பற்றி குணபாடம் எனும் நூலில் பதிவுகள் காணப்படுகின்றன.

மருந்தாகும் கறி

"ஆட்காட்டிப் பட்சி கடல்மேகம் போயளிக்குந்
தோட்காட்டு வாதந் தொடராவே வாட்கண்
அரிவையே பத்தியத்திற் காகும் புவியில்
தெரியமறைப் பில்லாமற் செப்பு"

என்ற பாடலின்வழி, மேகநோய் மற்றும் தோளைப் பற்றிய வாதநோய் ஆகியவை ஆள்காட்டிப் பறவையின் இறைச்சியை உண்டால் நீங்கும் என்றும், இது பத்தியத்திற்காகும் என்றும் குறிப்பிடுகின்றது குணபாடம் நூல்.

முட்டையின் மருத்துவக் குணம்



அம்மைகளுக்கு ஆள்காட்டியின் முட்டை மருந்தாகப் பயன்படுகிறது என்பதனை,

"கேளடா ஆள்காட்டிக் குருவி முட்டைக்
 கிருபையுடன் பார்த்தெடுத்துக் கொண்டுவந்து
ஆளடா சட்டியிலே வுடைத்து ஊற்றி
 அழகான புழுங்கலரிசி சம்பா வப்பா
வாளடா முட்டைக்கரு நனையு மட்டு
 வளமான அரிசியதை மிதமாய்ப் போட்டு
தாளடா வடுப்பேற்றிப் பதமே பார்த்துத்
 தவறாமல் கருகாமல் பொரித்து வாங்கு"
" வாங்கியே செப்பதனி லடைத்துக் கொண்டு
 வரிசையாய்க் காய்ச்சல்வந் ததுமே நீதான்
தாங்கியே இடக்கையி லரிசி கொட்டி
 தயவாக வலக்கையால் பிடியே யள்ளி ஏங்கியே
 திரியாம லுள்ளே கொள்ளே
இதமாக வரிசிதொகை யான மட்டும்
 பாங்கியே வைசூரி அதிகம் வாராப்
 பரிவான தேகத்துக் கழிவே யில்லை."



என்ற பாடல்கள்வழி விளக்கியுள்ளது. அதவாது, ஆள்காட்டிக் குருவியின் முட்டையை உடைத்துச் சட்டியில் ஊற்றி, கரு நனையும் மட்டும் சம்பாப் புழுங்கல் அரிசியை மிதமாய்ப் போட்டு, அடுப்பேற்றி, உரிய பதத்தில் கருகாமல் பொரித்தெடுத்து, செப்பில் அடைத்து வைத்துக்கொள்ள வேண்டும். காய்ச்சல் கண்டவுடன், இடக்கையில் அரிசியைக் கொட்டி, வலக்கையால் ஒருபிடி அள்ளி உட்கொள்ள, வைசூரி அதிகம் வராது. வைசூரித் தற்காப்பிற்கும் இதனை வழங்கலாம் என்பதே மேற்கூறிய இரு பாடல்களின் பொருளாகும்.

நன்றி– குணபாடம் (தாது –சீவ வகுப்பு)

# அரசு விழாக்கள் பிப்ரவரி - 2021



**ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் (1895–1970)**

ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் அவர்கள் 01.02.1895 இல் பிறந்தார். சிறந்த காந்தியவாதி என்று போற்றப்படும் இவர், 23.03.1947–இல் அன்றைய சென்னை இராசதானியின் முதலமைச்சரானார். 06.04.1949–இல் முதலமைச்சர் பதவியைத் துறந்தார்.

தமிழ்நாட்டரசின் இலட்சினைக்குக் கோயில் கோபுரத்தைத் தேர்ந்தெடுத்து "சத்தியமேவ ஜெயதே" என்ற சொற்றொடரை உருவாக்கினார். அரசியலிலிருந்து 1962–இல் விலகிக்கொண்ட இவர், 25.08.1970 அன்று இயற்கை எய்தினார்.

ஓமந்தூர் இராமசாமி ரெட்டியாரின் மணிமண்டபம் விழுப்புரம் மாவட்டம் திண்டிவனத்தில் அமைக்கப்பட்டு 20.02.2013 அன்று திறந்து வைக்கப்பட்டது.

**"மொழிஞாயிறு" ஞா.தேவநேயப் பாவாணர் (1902–1981)**

தனித்தமிழ் இயக்கத்தின் முதல் முழக்கம் மறைமலையடிகள் என்றால், அவர் வழியில் நின்று



தனித்தமிழை வளர்ச்சிபெறச் செய்தவர் தேவநேயப் பாவாணர். இவர் 07.02.1902ஆம் ஆண்டு சங்கரன் கோயில் அருகிலுள்ள பெரும்புதூரில் பிறந்தார்.

ஆங்கிலம், இந்தி, தெலுங்கு, கன்னடம், மலையாளம், மராத்தி, அரபு, சீனம், ஜெர்மன், வடமொழி முதலிய 23 மொழிகளைக் கற்றவர், அதில் இலக்கண அறிவையும் பெற்றவர்.

1949ஆம் ஆண்டு, தனித்தமிழ் இயக்கத்தின் தந்தையான மறைமலையடிகள், "சொல்லாராய்ச்சியில் ஒப்பற்ற தனித்திறமை படைத்தவர் பாவாணர்" என்று பாராட்டுச் சான்றிதழ் வழங்கினார். 1955ஆம் ஆண்டு தந்தை பெரியார் தலைமையில் நடைபெற்ற சேலம் தமிழ்ப் பேரவை விழாவில் "திராவிட மொழி நூல் ஞாயிறு" என்னும் பட்டம் பாவாணருக்கு வழங்கப் பெற்றது.

1956இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் 5ஆண்டுகள் திராவிட மொழி ஆராய்ச்சித் துறை ஆய்வாளராகவும், 1974இல் தமிழக அரசு தொடங்கிய "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின்" முதல் இயக்குநராகவும் பணியாற்றினார்.

ஒப்பியன் மொழிநூல், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், தமிழர் சரித்திரச்சுருக்கம், திராவிடத் தாய், தமிழர் திருமணம், தமிழ் வரலாறு, வடமொழி வரலாறு உள்ளிட்ட பல நூல்களைப் படைத்த பாவாணருக்கு, 1979இல் தமிழக அரசால் "செந்தமிழ்ச் செல்வர்" எனும் விருது வழங்கப்பட்டது.

1981இல் மதுரையில் நடந்த ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டில் "மாந்தன் தோற்றமும் தமிழர் மரபும்" எனும் தலைப்பில் உரையாற்றி விளக்கம் கூறி க்கொண்டிருக்கும் போது மாரடைப்பு ஏற்பட்டு இயற்கை எய்தினார்.

"மொழி ஞாயிறு" தேவநேயப் பாவாணரின் மணிமண்டபம் மதுரை மாவட்டம் சாத்தமங்கலத்தில் அமைக்கப்பட்டு 30.10.2007ஆம் ஆண்டு திறந்து வைக்கப்பட்டது.

**சிந்தனைச் சிற்பி சிங்கார வேலர் (1860–1946)**

இந்தியாவிலேயே முதன் முறையாக 1923இல் மே தினத்தைக் கொண்டாடியவர் என்ற பெருமைக்குரிய சிந்தனைச் சிற்பி சிங்காரவேலர் 18.02.1860இல் பிறந்தார். பன்மொழி அறிஞரான இவர், ஆங்கிலம், இந்தி, உருது, ஜெர்மன், பிரெஞ்சு



மொழிகளை அறிந்தவர். 1918இல் சென்னையில் முதன்முதலாக ஒரு தொழிற்சங்கத்தை உருவாக்கியவர் இவரே.

1923இல் சென்னையில் இந்துஸ்தான் லேபர் கட்சியைத் தொடங்கினார். இதே ஆண்டில் தொழிலாளி – விவசாயிகள் கெஜட் என்ற இதழையும் தொடங்கி மக்கள் படும் பாட்டை விளக்கினார். மேலும் தொழிலாளன் என்ற ஏட்டினையும் தொடங்கி நடத்தினார். சுயமரியாதை இயக்கம் தொடங்கும் முன்பே சுதர்மா என்னும் இதழில் பகுத்தறிவுக் கருத்துகளை எழுதி வந்தார்.

1925இல் யானைக்கவுனி பகுதியிலிருந்து தேர்வுசெய்யப்பட்டு மாநகராட்சி உறுப்பினரானார். மாநகராட்சிப் பள்ளிகளில் முதன் முதலாக மதிய உணவு அளிக்க ஏற்பாடு செய்தார். 1932–இல் தந்தை பெரியாருடன் சேர்ந்து சுயமரியாதை சமதர்மக் கட்சியைத் தோற்றுவித்தார். 11.02.1946 இவர் இயற்கை எய்தினார்.

ஆண்டுதோறும் இவரது பிறந்தநாளான பிப்பிரவரி18ஆம் நாள் சென்னை மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் அமைந்துள்ள இவரது திருவுருவச் சிலைக்குத் தமிழ்நாடு அரசின் சார்பில் மாலை அணிவித்துச் சிறப்புச் செய்யப்படுகிறது.

**தமிழ்த் தாத்தா உ.வே.சா. (1855–1942)**



தமிழ்த்தாத்தா என்று போற்றப்படும் உ.வே. சாமிநாதய்யர் 19.02.1855இல் பாபநாசத்திற்கு அருகிலுள்ள உத்தமதானபுரம் என்ற சிற்றூரில் பிறந்தார். ஓலைச்சுவடிகளைத் தேடித்தேடிப் பெற்று, கற்றதோடு மட்டுமல்லாமல், ஓலைச்சுவடியோடு தமிழ் ஒடுங்கிவிடாமல் காக்க அரும்பணியாற்றினார். அவரின் தமிழ்ப்பணியால்தான் சீவக சிந்தாமணி, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து உள்ளிட்ட அரிய நூல்கள் கிடைத்தன. 1906ஆம் ஆண்டு உ.வே. சா. அவர்களுக்கு ‘‘மகாமகோபாத்தியாயர்’’ என்ற பட்டம் வழங்கிச் சிறப்புச் செய்யப்பட்டது. இதற்கான பாராட்டு விழாவில் பங்கேற்ற மகாகவி பாரதியார், உ.வே.சா.வை வாழ்த்தி கவிதைகளை வாசித்தார்.

1932இல் உ.வே.சா.வுக்குச் சென்னைப் பல்கலைக் கழகம் ‘‘டாக்டர்’’ பட்டம் வழங்கியது. தமிழ்த்தாத்தா என்று போற்றப்பட்ட உ.வே.சா. 28.04.1942 இல் இயற்கை எய்தினார். இவரது முழு உருவச் சிலை சென்னை மாநிலக் கல்லூரியில் 1948–ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. இவரது நினைவில்லம் உத்தமதானபுரத்தில் 27.04.2008இல் திறந்துவைக்கப்பட்டது.

**தில்லையாடி வள்ளியம்மை (1898–1914)**

‘‘பலன் ஏதும் கருதாமல் தென்னாப்பிரிக்காவில் தியாகம் செய்து வெற்றி கண்ட தில்லையாடி வள்ளியம்மை அவர்கள்தாம் எனக்கு முதன் முதலில் விடுதலை உணர்வை ஊட்டிய பெருமைக்குரியவர்’’ என்று மகாத்மா காந்தியடிகளால் புகழப்பட்ட தில்லையாடி வள்ளியமை அவர்கள் 22.02.1898ஆம் ஆண்டு தென்னாப்பிரிக்காவில் உள்ள டீங்காட் என்ற ஊரில் பிறந்தார்.

தென்னாப்பிரிக்காவில், தென்னாப்பிரிக்காவின் திருமணப் பதிவாளர் சட்டப்படியும், கிறித்துவச் சடங்கு முறைப்படியும் நடத்தப்படும் திருமணங்கள் மட்டுமே செல்லும் என்று 1913இல் கேப்டவுன் நீதிமன்ற நீதிபதி மால்கம் அளித்த தீர்ப்புக்கு



எதிராகக் காந்தியடிகள் தலைமையில் நடைபெற்ற போராட்டத்தில் தில்லையாடி வள்ளியம்மை கலந்து கொண்டதால் 3 மாதக் கடுங்காவல் சிறைத்தண்டனை பெற்று மாரிட்ஸ்பர்க் சிறை சென்றார்.

சிறைக்கொடுமையால் பாதிக்கப்பட்ட தில்லையாடி வள்ளியம்மை, காந்தியடிகளின் முயற்சியால் 11.02.1914ஆம் நாள் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார். உடல்மெலிந்த நிலையில் வீட்டிற்கு வந்த அவர் 22.02.1914ஆம் நாள் தனது 16ஆவது பிறந்தநாளில் இயற்கை எய்தினார்.

சென்னை எழும்பூரில் உள்ள கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கத்தின் பட்டு விற்பனை நிலையத்திற்குத் தில்லையாடி வள்ளியம்மை பெயர் சூட்டப்பட்டு அவருக்குப் பெருமை சேர்க்கப்பட்டது. இவரது நினைவு மண்டபம் நாகப்பட்டினம் மாட்டத்திலுள்ள தில்லையாடி சிற்றூரில் 13.08.1971இல் திறந்துவைக்கப்பட்டது.

**திருமலை நாயக்கர்**

திருமலை நாயக்கர் மதுரையை ஆண்ட நாயக்க மன்னர்களுள் மிகவும் புகழ்பெற்றவராவார். இவர் கி.பி.1623 – 1659 வரையிலான காலப்பகுதியில் ஆட்சிப் பொறுப்பில் இருந்தார். இவர் திருச்சிராப்பள்ளியிலிருந்து தலைநகரை மீண்டும் மதுரைக்கு மாற்றினார்.



மதுரையை விழா நகரமாகவும், கலை நகரமாகவும் மாற்றிய அமைத்த பெருமைக்குரியவர். கட்டடக் கலை உள்ளிட்ட கலைகள் மீது கொண்டிருந்த ஆர்வத்தின் காரணமாக அவற்றின் வளர்ச்சிக்குப் பெரும்பங்களித்தார்.

மதுரையின் அடையாளங்களுள் ஒன்றாகத் திகழும் திருமலை நாயக்கர் மகால் இவரால் 1636ஆம் ஆண்டு கட்டப்பட்டது. இந்த மகாலுக்கான மணலை அள்ளுவதற்காகத் தோண்டப்பட்ட இடத்தைச் சீரமைத்து, சதுர வடிவிலமைந்த, தமிழ்நாட்டின் மிகப்பெரிய தெப்பக்குளமாக மாற்றி அதன் நடுவே வசந்த மண்டபம் ஒன்றையும் கட்டினார் திருமலை நாயக்கர். பழைய கோயில்களைத் திருத்தி திருப்பணி செய்தார். மதுரையின் புதுமண்டபமும் இவரால்தான் கட்டப்பட்டது.

**தியாகி சங்கரலிங்கனார்**

மதராசு மாநிலம் என்று அழைக்கப்பட்ட பகுதிக்குத் “தமிழ்நாடு” என்று பெயர்சூட்டக் கோரி 75 நாள்கள் தனது வீட்டின்முன் உண்ணாவிரதம் இருந்து தன் இன்னுயிர் ஈந்த தியாகி கண்டன் சங்கரலிங்கனார் 1895ஆம் ஆண்டு விருதுநகரை



அடுத்துள்ள மண்மலைமேடு என்னும் ஊரில் பிறந்தார். கதர் விற்பனையில் ஆர்வம் செலுத்திய இவர் காந்தியடிகளுடன் தண்டியாத்திரையிலும் பங்குகொண்டுள்ளார். தனது சொத்துகளை விருதுநகரில் உள்ள பள்ளிக்கு எழுதிவைத்த ஈகைக் குணத்துக்காரர். தனியாக மொழிவழி மாகாணம் வேண்டும், சென்னை மாகாணத்திற்குத் “தமிழ்நாடு” என்று பெயர் மாற்ற வேண்டும், தேர்தல் முறையில் மாற்றம் வேண்டும், தொழில்கல்வி, இந்தியா முழுவதும் மதுவிலக்கு உள்ளிட்ட 12 கோரிக்கைகளுடன் சூலைக்கரை மேட்டில் தனியாளாக உண்ணாவிரதத்தைத் தொடங்கினார். தொடர் உண்ணாவிரதத்தின் காரணமாக உடல்நிலை மோசமாகி 13.10.1956ஆம் நாள் உயிரிழந்தார்.

1968 திசம்பர் 1ஆம் நாள் தமிழ்நாடு முழுக்க பெயர் மாற்றம் விழாவாகக் கொண்டாடப்பட்டபோது தியாகி சங்கரலிங்கனாருக்கு நன்றியும் வணக்கமும் தெரிவிக்கப்பட்டது. தியாகி சங்கரலிங்கனாரின் நினைவைப் போற்றும்வகையில் தமிழக அரசால் விருதுநகர் கல்லூரிச் சாலையில் நகராட்சிப் பூங்கா அருகில் ரூ.76 இலட்சம் செலவில் மணிமண்டபம் ஒன்று கட்டப்பட்டுள்ளது.

❖